உ

செந்திலாண்டவன்

திருவடி துணை.

# திருச்செந்திற் பதிகம்.

இஃது

திரிசிரபுரம்

திரு. சிவாநந்தசாகரயோகீசுவரர்

அவர்களது மருகரும், மாணக்கருமாகிய

அலகளை

வரகவி - திரு. அ. சுப்பிரமணிய பாரதியார்

இயற்றியது.

---


சென்னை :

வைஜயந்தி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1903.

# சாற்றுக்கவிகள்.

திரு. சிவாநந்தசாகரயோகீசுவரரவர்களை

பாஜைக்கரும்

தஞ்சாவூர் ஸெண்ட் பீடர்ஸ், காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய

## ஆ. சேதுராயபாரதியாரவர்கள்

இயற்றியது.

திருமருவு தாளமலை யெறியங்கில வுமிழலைவாயச் செல்வன்
பொறாட குருகுநிரி கரணமுமொரு தொருபதிக மினிது
புனை துவப்பினீந்தான், தெருள்பல்கலை யலைதவழ்சிவாநந்த
சாகரதே சிகன்பா லன்பு, பெருகமகிழ் வரகவிசுப் பிரமணிய
பாரதிநாம பேசு மாறே.

---

திரு. சிவாநந்தசாகரயோகீசுவரரவர்களை

பாஜைக்கருளொருவராகிய

சென்னை திருவேட்டீசுவரம் பேட்டை

## க.-சி. சிவசங்கரபண்டிதர்

இயற்றியது.

முத்திறைகக்கு நெடுந்தரங்கக் கடலலைவா யுகாதருளு முரு
கன் பொற்றாட், பத்திவரும் வழியிதுவா மெனப்பதிக மொன்
றியற்றிப் பரிவு கூர்ந்த, தெத்திசையும் புகழ்பெறுசிவாநந்த
சாகரத்தி லிசைந்த ருந்திப், புத்தமுத மனையதமிழ் மழை
பொழிசுப் பிரமணியப் புயலாய்ந் தன்றே.



உ

செந்திலாண்டவன்

திருவடி துணை.

# திருச்செந்திற் பதிகம்.



## காப்பு.

செந்திற் பதிக்குமர தேசிகன்பொற் ருட்கினிய
பைந்தமிழா லோர்பதிகம் பாடவே—தந்திமுகத்
தெந்தையிரு செஞ்சரண மெப்போதுஞ் சிந்தித்து
வந்திக்க வந்தருளும் வாக்கு.

## ஆசிரியவிருத்தம்.

திருவளரு மாணிக்க மணியிழைத் திளவெயில்செய் திவ்
யமணி மகுடமாறும் - செங்கனக வம்புயத் துங்கமுக மாறு
மொளிர திரிபுண்ட ரத்தினழகும், மருவளரு நீபமலர் மாலை
யொடு நவரத்தின மாலையொளிர் மார்பினழகும் - வரையென
விலங்குமீ ராறுதிண் டோள்களும் வாகுவல யத்தினழகும்,
இருபுறந் தெள்ளமுத மொழிவள்ளி தெய்வானை யின்பமுற
வாழுமழகும் - இணையிலா வேலுடன் சிங்கார மயில்மீதி லேறி
விளை யாடுமழகும், அருமறைகள் காணாத வானந்த ரூபனே
யடியனேன் காணவருவாய்- அருணகிண் கிணிநாத தருணபங்
கஜபாத வதுலசின் மயபோதனே. (1)

நிலையிலா விவ்வாழ்வு நிஜமல்ல வென்பதை நினையாமல்
மதிமயங்கி-நெடுவேற் றடங்கணார் பாழ்மயற் பட்டுநா னினதடி
மறந்து நொந்தேன், உலையிலா மெழுகென்ன நெஞ்சுருகி
யன்பொடுகை யுச்சிமேற் கூப்பிநின்று - ஒப்பிலா வப்பனே
வனவல்லி மோகனே யுனதுபுகழ் பாடவருள்வாய், மலையெ
லாம் வள்ளிதெய் வானையுடன் விளையாடு மயில்வாக னக்கட
வுளே - மாயனார் மருகனே மணிமந்த்ர ரூபனே மாதேவ னின்
றதுரையே, அலையெலாம் வெண்முத்த மடிதூவி யர்ச்சிக்கு
மலைவா யமர்ந்தமுருகா - அருணகிண் கிணிநாத தருணபங் கஜ
பாத வதுலசின் மயபோதனே. (2)

புண்டரீ கத்திலுறை மாமறைக் கிழவனும் புவியளந் தோனு
மறியாப்-புராரிதரு மைந்தனே செந்தில்வாழ் கந்தனே புள்ளி

மயிலேறுமணியே, வண்டெலா மதுவுண்டு கொண்டாடி யிசை பாடும் வண்கடம் பணிமார்பனே - வஞ்சக் கொடுஞ்சூர னெஞ்சம் பிளந்துஜய வாகைபுனை யாறுமுகனே, மண்டுதீ யெனவுடலை வெம்பிணிகள் பற்றவே வாடிநா ளோடிவந்தன் - மாபாதகம்போக்கி யுதியாத வாழ்வுதரு மலரடிப் புகல்புகுந்தேன், அண்டர்நா யகனீன்ற தெய்வானை மோகனே யடியனேன் கவலைதீர்த்தாள் - அருணகிண் கிணிநாத தருணபங் கஜபாத வதுலசின் மயபோதனே. (3)

முத்திக்கு வித்தாகு சித்தியகல் யாணகுண முருகனே செந்தில்வரதா - முப்பத்து முக்கோடி தேவரொடு முத்தேவர் முன்னித் துதிக்குமுதல்வா, எத்திக்கும் யாவுமருள் சத்திக்கௌமாரிதரு மீசனே ஞானவடிவே - எக்குற்றம் யான்செயினுமக்குற்ற நோக்காம லெளிதில்வந் தாளுமிறைவா, பத்திமனதுக்கினிது தித்திக்கு மமுதமே பாவைகுற வள்ளிகணவா-பாரிலே யுன்றனிரு பாதார விந்தமே பற்றாக வந்தடைந்தேன், அத்திக்கு வீடளித் தாண்டமான் மருகனே யருள்சுரந் தாளவருவாய்-அருணகிண் கிணிநாத தருணபங் கஜபாத வதுலசின் மயபோதனே. (4)

மெய்யான தெய்வமாய் விளையாடு மப்பனே மேதினியிலுன்னைநம்பி - மெய்யினைப் பொய்யென்று தேறுவார் பேரறிவில் விளங்குநற் றீபவொளியே, வையாபு ரிப்பழநி முதலாறு படைவீடு வாழுமா ணிக்கமணியே - வஞ்சக் கொடும்

பில்லி சூனியம் வறுமைநோய் வந்தென்னை யணுகாமலே, ஒய்யார மாய்வள்ளி யம்மைதெய் வானையுட னூரகேசன் முடியாறவே - ஒப்பிலா மயிலேறி வையாளி யாடிவரு முன்பாத சேவைதந்தாள், ஐயான னக்கடவு ளருள்சுப்ர மணியனே யலைவா யமர்ந்த துரையே - அருணகிண் கிணிநாத தருணபங் கஜபாத வதூலசின் மயபோதனே. (5)

கந்தமலர் தந்துதவு நந்தவன மெங்குமெய்க் காதலொடு பூவெடுத்துக் - கந்தாகு காவென்னு நாமங்க ளோதிமுக் காலுமர்ச் சித்துநாளும், வந்தனைசெய் சிந்தையொடு செந்தமிழ்க் கவிபாடி வாழ்த்தவல புத்தியோங்க - வாணிபூ மாதினரு ளொருபோது மகலாத வண்ணமுன தாறெழுத்தாம், மந்திரச் சித்திபெற வெந்தையிச் சித்துளேன் மைந்தனென் பிழைபொறுத்து - மந்தாகி னிப்புதல்வ தந்தாவ ளன்றுனைவ மந்தார மலர்மார்பனே, அந்தமயி லேறியென் முந்தைவினை சிந்தவந் தாதரித் தருள்செந்தில்வாழ் - அருணகிண் கிணிநாத தருண பங் கஜபாத வதூலசின் மயபோதனே. (6)

பாதார விந்தமொரு போதேனு மெண்ணிநான் பாடாத பாவியானேன் - பத்தியுட னொருநாளு முன்கோவில் வலம் வந்து பணிகிலேன் பந்தமாற்றும், வேதாந்த வுண்மைதனை யோர்கிலேன் நின்பூசை மேவியொரு நாளுமறியேன் - வெறி மலர்க் கூந்தன்மட மாதர்க்கு நெஞ்சுருகி வெம்பவத் தாழ்ந்து நொந்தேன், மாறுபடு சூரனுடல் கூறுபட வென்றுஜய மாலையணி வேலாயுதா - வானவர்க் கிறைவனே மஹாவல்லி மோஹனே

மயிலேறு கம்பீரனே, ஆதார மற்றவென் றீதேக வந்தருள்செ யையனே செந்திநகர்வாழ் - அருணகிரின் கிணிநாத தருணபங் கஜபாத வதுலசின் மயபோதனே. (7)

சேலார்பு னற்கமல வாவிசூழ் செந்தில்வளர் தேவர்சிறை மீட்டவேலா - செகந்தனிற் பரசமய கொள்கையைக் கைக்கொ ண்டு செத்துப்பி றக்குமவனை, மேலாக வெண்ணியுனை யெ ண்ணாத பாவிகள் வீடடையு மார்க்கமுளதோ - வெந்தழற் பொறிவீசும் விழியோடு பகடேறி வெகுதூதர் சூழவந்து, சூலாயு தக்கால னார்பாசம் வீசியே சுற்றிப்பி டித்தடுக்கால் - சோ திமயில் வாகனு வுனையன்றி மரணபய துன்பந் தொலைப்ப தெவர்காண், ஆலால முண்டபர சிவமீன்ற கந்தனே யறுமுகா கருணைவடிவே - அருணகிரின் கிணிநாத தருணபங் கஜபாத வதுலசின் மயபோதனே. (8)

வண்டடை கிடந்துநற வுண்டுபெடை யோடுறையும் வண்டா மரைக்கிழவனும் - வாளரவு விடமுமிழ மீதேறி நட்டமிடு மாயனும் வெருவியோட, மண்டியெழு மாலால முண்டுலக முய் யவருள் மங்கையுமை பங்கமர்ந்த - மாதேவ னீன்றருளு மான ந்த வெள்ளமே மயிலேறு முருகேசனே, பண்டைய வினைப் பகைஞர் வந்துபோ ராடவெகு பாடுபட் டறிவிழந்து - பரதவித் திடுமெனக் குனையன்றி மற்றுமொரு பற்றில்லை செந்திலிறை வா, அண்டபகி ரண்டமுந் தானாகி வேறான வாதிவே தாந்த முடிவே, அருணகிரின் கிணிநாத தருணபங் கஜபாத வதுலசின் மயபோதனே. (9)

கயிலாய மலைமீது சயிலமா தலைமையொடு சண்டமார் போற்றவாழும் - கங்கைபணி சண்ணுதற் கெண்ணரிய வேய்பொருட் கருத்தினை விரித்துரைத்துக், குயிலான மொழிவள்ளி தேவகுஞ் சரியோடு கொஞ்சிவிளை யாடுமெமலா - குற்றங்கள் செயவதே யியல்பான வென்மீது கோபங்கொ ளாமல்வெற்றி, மயிலேறி யருள்பெருகு முகமாறு மொளிரவே வடிவேலி லங்கவதென் - வல்வினைத் தொடர்மனச் சஞ்சலந் தீரவொரு வாமனித் தடிமைகொள்வாய், அயிராணி மங்கலிய மொளிவீசி வாழவருளாண்டவா செந்திநகர்வாழ் - அருணகிண் கிணிராஜ தருணபத சஜபாத வதுலசின் மயபோதனே. (10)

திருச்செந்திற் பதிகம் முற்றிற்று.

ஸ்ரீ திருச்செந்திலாண்டவன்

திருவடி வாழ்க